ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

சகாதேவர் அருளிச்செய்த

# தொடுகுறி சாஸ்திரம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 111 | 112 | 113 | 114 | 121 | 122 | 123 | 124 |
| 131 | 132 | 133 | 134 | 141 | 142 | 143 | 144 |
| 211 | 212 | 213 | 214 | 221 | 222 | 223 | 224 |
| 231 | 232 | 233 | 234 | 241 | 242 | 243 | 244 |
| 311 | 312 | 313 | 314 | 321 | 322 | 323 | 324 |
| 331 | 332 | 333 | 334 | 341 | 342 | 343 | 344 |
| 411 | 412 | 413 | 414 | 421 | 422 | 423 | 424 |
| 431 | 432 | 433 | 434 | 441 | 442 | 443 | 444 |

சென்னை-இட்டா

**பார்த்தசாரதி நாயுடு & சன்ஸ்.**

அவர்களாற்றமது,

சக்கரவர்த்தி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] 1929. [அணா 4.

நெ. 189, தங்கசாலை தெரு, மதராஸ்.

உ

கடவுள் துணை.

# நூன்முகம்.

## விருத்தம்.

பூலோகமானிடர்கள் பிழைக்கவேண்டி பொய்யுரையர பாண்ட வருக்கிளையதம்பி, சாலோகசாஸ்திரமுந் தெளிந்தஞானி சாஸ்திரத் தின்கொடியுடைய சகாதேவன்தான், கார்காலத்திலுடலிலேமைகாண கார்மேகவண்ணனது கருணைகொண்டு, மேலானதொடுகுறியை மொ ழிந்ததாலே மேதினியிலேகாம்பரம் வெளியிட்டானே.

சாமியென்றுனுள்ளன்பு யிருக்கவேண்டும் சக்கரவர்த்தியானு லும் பத்திவேணும், காமிகளாய்த்திரிபவர்க்கு வெட்கமில்லைகைகண்ட தொடுகுறியை கடப்பதில்லை, பூமியிலே யிந்நூல்தான் வெளிவந்தா லும் புத்தியில்லாமூடருக்குப் புலப்படாது, வாமியுடமூத்தவனு ரரு ளினாலே வரைந்திட்டசகாதேவன் வாக்கைப்பாரே.

பாரப்பாவாக்குகிலே கண்டபோதும் பந்தயமாய் மாயச்சூதாடும் போதும், தூரப்பாதுகிலதனை யுரியும்போதும் துணையிழந்துவனவா சம்போகும்போதும், சீரப்பாவிராடனிடம் சேரும்போதும் சிற்றம ராய் மாடுபிடிசண்டைபோதும், ஆரப்பாகார்மேகன்காப்பேனென்று அருகிருந்துசொன்னதோர் குறியிதாமே

தொடுகுறியின் சாஸ்திரத்தின் துணையினாலே தொல்லுலகைப் பரிகொடுத்தேதுஞ்சவில்லை, விரிவான தொடுகுறியின் வலுவினாலே வனவாசம்சென்றவரும் வாடவில்லை, படியின்மிசை சகாதேவனெமு திவைத்த பாங்கானகணிதவகை தொண்ணூற்றுரில், அடைவான தொடுகுறியேபோதுமென்று அன்புடனே நாதாக்களடுத்திட்டாரே.

நாதாக்களடுத்தமொழி பொய்யாகாது நம்பாதமடையருக்கு மெய்யாகாது, வேதாந்தஞானிசகாதேவனாலே விளம்பியவித்தொடு குறியோ வீண்போகாது, ஆதாரமிதை விட வேறினங்கிட்டாது அண் டசராசரத்திற்கு மடுத்தநூலாம், தீதுடனே நன்மைரெண்டு தெரிந் துக்கொள்ள தெளிவாகவிவரமதை தெரிவிப்பேனே

தெரிந்திடவேவட்டமாய் மெழுகிமைந்தா தெரிவையர்கள் மஞ்சளினல் கணேசர்வைத்து, அருகினிலே தாம்பூலம் கதலிவெல்லமணுவேணும் கற்பூரம்கொளித்திவைத்து, பரிவாகநீவணங்கும் குணதெய்வத்தைப் பாண்டவரைச்சிந்தையிலே பதியவைத்து, சிறுபயலாங் கன்னியிடம் மலரையீந்து சக்கரத்தி,லெதுவேணுந் தீண்டச்சொல்லே.

தீண்டியதோர் லக்கமதை குறித்துக்கொள்ளு தெய்வமொழிப் பாட்டிதனைத்தேடிப்பாரு, வேண்டியேதொட்டதொரு லக்கம்போலே வருகின்றசெய்யுள்தனை வாசித்தாக்கால், காண்டீபன் தம்பியுட கருணையாலே கலக்கமதுவிலகுமடா கண்ணாடிப்போல், பாண்டவர்கள் தொடுகுறியைப் பரீட்சிப்போர்க்கு பத்தினிதுரௌபதை திருவை பலிக்கும்பாரே.

நான்முகம்-முற்றிற்று.

---

சீதாசக்கரம்.

| | | |
|---|---|---|
| 1 | 7 | 8 |
| 3 | 2 | 6 |
| 5 | 9 | 4 |

1-லாபம் 4-பீடை 7-தனம்
2-நாசம் 5-க்ஷேமம் 8-மரண
3-சிநேகம் 6-கலகம் 9-ப்ரீதி

இந்த சீதா சக்கிரத்தில் கண்ட நெம்பரை ஒரு சிறுவனைக் கைகால் சுத்திசெய்து வரச்சொல்லி ஒரு புஷ்பங்கொடுத்து நெம்பரைணச்சொல்லி பலன்களைத் தெரிந்து கொள்ளவும்.

உ

கணபதி துணை.

# தொடுகுறி சாஸ்திரம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 111 | 112 | 113 | 114 | 121 | 122 | 123 | 124 |
| 131 | 132 | 133 | 134 | 141 | 142 | 143 | 144 |
| 211 | 212 | 213 | 214 | 221 | 222 | 223 | 224 |
| 231 | 232 | 233 | 234 | 241 | 242 | 243 | 244 |
| 311 | 312 | 313 | 314 | 321 | 322 | 323 | 324 |
| 331 | 332 | 333 | 334 | 341 | 342 | 343 | 344 |
| 411 | 412 | 413 | 414 | 421 | 422 | 423 | 424 |
| 431 | 432 | 433 | 434 | 441 | 442 | 443 | 444 |

நன்மைதீமை அறியும்படியான சக்கரம்.

விருத்தம்.

பேர்வளரும் ஆரென்னும் சாஸ்திரத்தில்
பேசியதோர் தொடுகுறியின் பெருமைக்கேளீர்
சீர்வளரும் ஐவருக்கும் யிளையதம்பி
சிரஞ்சிவி சகாதேவர் சொன்னவாக்கு
கார்வளர்போல் கண்டுமனந் தெளிவதற்கு
கருணைமொழி சிவனயன்மால் குகனுஞ்சாட்சி
தார்வளரமேல் இப்பொருளை வெளிதாய்ச்செய்ய
தருபஞ்ச பாணிசுதன் காப்புதானே.

காப்பு-விருத்தம்.

பஞ்சபாண்டவரின்பாதம் பலதினமறவாய்போற்றி
துஞ்சமாயெவர்க்குநன்மை தொடுகுறிநாலைச்சொல்ல
செஞ்சிமாநகரம்வாழும் சிறுவனேகாம்பரன்தானும்
தஞ்சமாய்குருவின்பாதம தாள்பணிந்தேற்றினேனே.

## 111-வது-விருத்தம்.

அரியவேநூத்திபதினொன்றைத்தொட்டாய்
　　அப்பனேகேழ்க்குமொரு செய்திக்கேளு
குறைவின்றிகாரியங்கள் ஜெயமேயாகும்
　　கொற்றவனே ஒருவருடப்குறைவேயில்லை
பெருமையுடன்யெதிரியைநீ வெல்வாயப்பா
　　பேசியதோர்நாள்கிரகம் வீட்டுநன்மை
குருமொழிபோல் சொன்னகுறி உண்மைகாண
　　குறிப்புண்டுவலதுதோளில் மச்சம்தானே.

வ-ம் நீ நினைத்தகாரியம் ஜெயமாகும் எதிரியை நீ வெல்வாய் நீ தொட்டவேலையும் நன்றாயிருக்கிறது உன் வீட்டுக்காரியமும் ஜெய மாகும் இந்தராசி உனக்கு ஒருவருடம் குறைவில்லாமல் இருப்பாய் இதற்கு அடையாளம் வலது புயத்தின்பேரில் மச்சமிருக்கும் பார்க் கவும்.

## 112-வது.

நன்மையென்றயோசனையை மனதிலெண்ணு
　　நாட்டமாய்நூத்திபனி ரெண்டைதொட்டாய்
உன்னுண்டயமனம்போலே முடியாதப்பா
　　ஒருவராக்ஷேபனையாம் திண்ணமாகும்
மன்னவனேவுன்மனைவி வுளவுமுண்டு
　　மாகாளிவுருவமதை படைத்தமாது
தன்மையாய்மனம்போல நடப்பதற்கு
　　தளரர்மல்தேவதைக்கு பூசைபோடே

வ-ம். நீ நல்லகாரியத்தை மனதில்நினைத்துதொட்டதால் அந்த காரியங்கைகூடாது அது ஏனென்றால் உன்பெண்சாதி நடுவில் தா தா யிருக்கிறாள் ஆனபடியால் அந்த காரியம் தாமிஷத்தில் கூடுப் குல தேவதைக்கு பூசைபோடு பலிக்கும்.

## 113-வது.

கேளப்பாநூத்திபதி மூன்றைதொட்டாய்
　　கண்மணியேகேழ்க்குமொரு சேதிகேளு
தாளப்பாபுத்திரர்கள் தழைத்துவாழ்வாய்
　　தனலாபக்குறைவில்லை மிகவேயுண்டு
மீளப்பாஜெயகால முதவியாச்சி
　　மைந்தனேபடுந்துன்பம் விலகிபோச்சி
கேளப்பாசொன்னமொழி நம்பிப்பாரு
　　கிருபையொடுகுருமுனியுங் காப்பர்தானே.

வ-ம். நீ தொட்டகுறி தனலாபங் கிடைக்கும் புத்திரபாக்கிய முண்டு மனக்கவலைநீங்கி சந்தோஷமடைவாய் உனக்கு கிரகங்கள் நல்லதாயிருக்கிறது அதனால் சுகமுண்டு உத்தமம்

114-வது

மைந்தனே நூத்திபதி னாலைத்தொட்டாய்
மகாநன்மைவருத்தமது விலகிப்போச்சி
சிந்தையதுகளித்திடுவாய் லாபமுண்டு
சீமான்போ லுனக்கொருவர் உதவியாவார்
வந்திடுவாய்யின்னமூன்று மாதத்தின்மேல்
வளமாக குருவுனக்குப் பலனைக்கூட்ட
இந்தவிதம்யார்சொல்வார் சித்தர்சொல்வார்
இயம்பியசுகதேவர் நூலைநம்பே.

வ-ம் நீ நினைத்தகாரியம் நன்மையாகும் அது ஒரு சினேகித ரால் உதவியாகும் லாபங்கிடைக்கும் உனக்கு இன்னம் மூன்றுமாதத் தின்மேல் குரு நல்லவனாக வருவார் உத்தமம்.

121-வது.

தொட்டதொருலக்கினத்தின் விபரங்கேளு
தொல்லையெனமனவருத்தம் விலகிப்போச்சு
இஷ்டகுலதேவதைக்கு பூசைபோடு
யெதிர்படவேசினேகிதரால் உதவியாகும்
நஷ்டமில்லைவியாபாரம் பலிக்குமப்பா
நயமென்றேவுன்மொழியை நம்புவார்கள்
கெட்டியென்றேமுன்னோர்கள் சொன்னவாக்கை
கண்மணியேநம்பியுந்தன் கவலைதீரே.

வ-ம். நீ தொட்டலக்கத்தில் மனவியாகூலந்தீரும் ஒருசினேகித னால் உதவியுண்டு லாபங்கிடைக்கும் குலதேவதைக்கு பூசைபோட வும் சகலமுங் கைகூடுமென்று முன்னோர்கள் கூறுகிறார் உத்தமம்

122-வது.

நூற்றுடனேயிருபத்தி ரெண்டைத்தொட்டீர்
நம்பியதோர்வியாபாரம் பலிதமாகும்
தோற்றதொருபொருளெல்லாம் வந்துசேரும்
துணையென்றுஒருவரையும் நம்பவேண்டாம்
தேற்றியதாய்உன்மனங்கள் ருசிக்கப்பேசி
நஷ்டமதைவைத்திடுவார் சினேகரப்பா
பார்த்திடுவாய்சொன்னமொழி நம்பிநீயும்
பாலகனேயிதன்பரிட்சை பாரின்மீதே

வ-ம் நீ நினைத்தகாரியம் பலிக்கும் வியாபாரம் விர்த்தியாகும் கைவிட்டுப் போனபொருள் வந்துசேரும் சினேகிதரை நம்பவேண்டாம் நல்லவராகப்பேசி மோசஞ்செய்வார்.

123-வது.

தின்பமதுவுன்னைவிட்டு விலகிபோச்சி
தொட்டதொருகுறியினிட நன்மையாலே
இன்பமுமுபக்துக்கு ஆகாச்செய்கை
யிருக்குதப்பாவுன்னிடத்தில் விட்டுநீக்கு
தென்புறமேவஇன்னமைந்து தினத்திற்குள்ளே
துலவிருந்துசேதிகண்டு மகிழப்போருய்
அன்புறமேவயினியுனக்கு குறைவேயில்லை
ஆதிசிவன்சாட்சிபதா யறையக்கேளே.

வ-ம். நீ இப்போது தொட்டகுறியால் மனக்கவலைதீரும் ஆனு லுன்னிடத்திலொரு கெட்ட செய்கையிருக்கிறது அதினுலுனனுடைய பந்தக்களுக்கு விரோதமாயிருக்கிருய் அந்த செய்கையை நீககிவிட்டா லின்னமைந்துதினத்திற்குள் துலவிலிருந்து நல்ல சேதி வரும் சந்தோஷப்படுவாய்.

124-வது.

அஞ்சாதேதொட்டதொரு குறியைக்கேளு
அப்பனேயினிபொன்றுங் குறைவேயில்லை
வஞ்சனைசெய்கையாளர் உறவேயாவார்
வகைதப்பிப்போனபொருள் வந்துசேரும்
நெஞ்சதனில்நினைத்ததொரு யெண்ணங்கூடும்
நினைக்கவேசெய்தொழிலும் லாபங்காணும்
கொஞ்சநாள்கழியஇவ் வருடங்கூடும்
குருமுனியும்சாட்சிபதாய் கூறினேனே.

வ-ம் நீ தொட்டகுறி நூத்தியிருபத்திஞலாகையால் இனியுனக்கு குறைவில்லை பகையாயிருந்தவர்கள் உறவாகுவார்கள்உன்கைவிட்டுப்போனபொருள் வந்துசேரும் செய்தொழிலில் லாபங்கிடைக்கும் நினைத்தகாரியம் இவ்வருஷம் கைகூடும் குலவிர்த்தியாகும் உத்தமம்.

131-வது.

தொட்டகுறிநூத்திமுப்பத் தொன்றதாலே
தோஷமில்லையெண்ணமிது முடியுமப்பா
விட்டுதப்பாநவக்கிரகம் பூசைசெய்ய
வெகுநாளாய்உன்னைதொட்ட பீடையெல்லாம்
பொட்டெனவேபெண்ணுெருத்தி சினேகம்ஆவாள்
பொருளுடனேலாபம்வரும் கவலைவேண்டாம்
இட்டமுடனிந்நூலை நம்பினோர்க்கே
யென்னாளும்குறைவில்லை யென்றூர்தானே.

வ-ப். நீ தொட்டகுறியால் ஜெயமாகும் பெருத்த ஆலோசனே பண்ணியிருக்கிறாய் அது ஒரு பெண்ணால்முடியும நீ நவக்கிரகபூசை செய்துவரவும் ஜெயமாகும் உத்தமம்.

### 132-வது.

மத்திபம்நூத்தி முப்பத்திரண்டில்
மனவருத்தம்தொட்டகுறி பொருளும்நஷ்டம்
சித்தமும்கலக்கமாம் வியாதிசேரும்
செய்தொழிலுங்கைவிட்டு சேருமப்பா
உத்தமனேவுன்மனைவி பகையாளாவாள்
உலகமகிழ்தொடுகுறி வுண்மைசொன்னேன்
முத்திபெற்றமுன்னோர்கள் சொன்னநூலை
மூடரல்லோபொய்யென்று மொழிகுவாரே.

வ-ம் நினைத்தகாரியம் ஆகாது பொருள்நஷ்டம்வரும் திரேகம் அசௌக்கியமாய் வியாதிதரும் உன் பெண்சாதி பகையாவாள் செய் தொழில் கைவிட்டுப்போகும் மத்திபம்.

### 133-வது.

காணவேநூத்திமுப் பத்திமூன்று
கண்மணியேதொட்டதினால் நன்மையுண்டு
வேணபெரியோரா லுதவியாகும்
வருகுமொருயெதிரியைநீ வெல்வாயப்பா
தோணவேயுந்தன்குல தேவதைக்கு
தொழுதுமேபூசைசெய்து வந்தாயானால்
பூணவேலாபமுண்டு வீட்டுநன்மை
புண்ணியனேசொன்னமொழி நம்பிப்பாரே.

வ-ம். நினைத்தகாரியம் ஜெயமாகும் ஒரு பெரியமனுஷர் உதவி யாவார் உன் எதிரியை வெல்வாய் ஆனால் உன்வீட்டுக் காரியமும் நன்மையாகும் குலதேவதைக்கு பூசைபோடவும் உத்தமம்.

### 134-வது

அறியவேநூத்திமுப் பத்தினாலை
அப்பனேதொட்டதொரு செய்திகேளும்
தெரியவேவியாபாரம் விர்த்தியாகும்
தங்குகின்றதிரேகத்தின் பீடைநீங்கும்
வருகுமொருயெதிரிகளும் விலகிநிற்பார்
வையமிசைபுத்திரரை பெற்றுவாழ்வார்
குருமொழிபோல்சகாதேவர் சொன்னவாக்கு
குவலயத்தில்கண்டுமன மகிழுவீரே.

வ-ம் நீ நினைத்தகாரியம் ஜெயமாகும் வியாபார விர்த்தியாகும் உன் பெதிரிகளெல்லாம் விலகிப்போவார் உன் திரேகபீடையும் ஒழியும் புத்திரபாக்கியமுண்டாகும் இதுகளெல்லாம் நாளுக்குநாள் கைகூடும் உத்தமம்.

### 141-வது.

பெண்ணிவந்தவிவாகமது கூடுமப்பா
  மிசையவேநீதொட்ட குறியினாலே
பண்ணவேலாபம்வரும் கவலேவேண்டாம்
  பகையாளரண்ணன்தம்பி வுரவேயாவார்
நண்ணியேபந்துஜனம் உறவேயாவார்
  நஷ்டமில்லேயெத்தொழிலும் பலிக்குமப்பா
கண்மணியேஒருவரிட சகாயம்வேண்டாம்
  கருத்ததுபோல்நடத்திமனக் கவலேதீரே.

வ-ம். நீ தொட்டகுறி நூத்திநாற்பத்தி யொன்றுகையால் நினைத்துவந்த கல்யாணகாரியம் முடியும் தனலாபங்கிடைக்கும் பகையாயிருந்த அண்ணன் தம்பிகள் உறவாவார்கள் பந்துஜனம் உதவியாகும் தைரியம்விடவேண்டாம் ஒருவர் தாட்சண்யமில்லாமல் நடத்தலாம் ஜெயமாகும் உத்தமம்.

### 142-வது.

சீராகதொட்டகுறி செய்திகேளு
  செல்வமதுபெருகுமடா விவாகம்கூடும்
தோராமல்வாழ்ந்திடுவாய் துணிவாய்நீயும்
  துணேகொண்டசினேகிதனே நம்பவேண்டாம்
நேராகமுன்னொருநாள் மோசம்போனாய்
  நாட்டமதைவிட்டின்மேல் நீயும்வைத்து
பேராகஅம்மனைநீ பூசைசெய்ய
  பலிக்குமடா சகலமும்நீ பயப்படாதே.

வ-ம். நீ தொட்டலக்கம் நூத்திநாற்பத்திரண்டாகையால் தனலாபங்கிடைக்கும் விவாகங்கூடும் ஆனால் நீ ஒரு சினேகிதனே நம்பியிருக்கிறாய் அவன் கெட்ட எண்ணம் வைத்திருக்கிறான் அவனை நம்பவேண்டாம் அது ஏனென்றால் நீ முன்னொருதடவை மோசம் போய் இருக்கிறாய் வீட்டுக்கியாபகமாயிரு அம்மனை பூசைசெய்ய சகலமும் நன்மையாகும்

### 143-வது.

நூத்திநாற்பத்திமூன்றை நப்பிநீதொட்டதாலே
தோற்றிடும்பொருளுஞ்சேரும் தர்மவான்சினேகமாவான்
தோற்றியகஷ்டந்தீரும் திரவியலாபமாகும்
ஆத்திரப்படவேவேண்டாம் அம்மனைபூசைசெய்யே.

வ-ம். நீ நினைத்த காரியம் ஜெயமாகும் நல்லதர்மமுள்ள சிநேகிதரால் உதவியுண்டு மனக்கவலைதீரும் தனலாபங்கிடைக்கும் நீ உன்னுடைய குலதேவதைக்கு பூசைபோட சகலமுங்கைகூடும்.

144-வது.

கண்மணியேநூற்றிநாற் பத்திநாலை
கருத்துடனேதொட்டதினால் வருத்தமில்லை
பண்ணவேபெரியோரால் உதவியுண்டு
பலமானவுத்தியோகங் கிடைக்குமப்பா
எண்ணங்கள்வெவ்வேறு யெண்ணவேண்டாம்
யெத்தொழிலுசெய்தாலும் பலனேகாணும்
திண்ணமென்றுமூடரல்லோ யிதனைச்சொல்வார்
தெரிந்தவர்க்குயிந்நூலே சிரேஷ்டந்தானே.

வ-ம் நீ நினைத்தகாரியம் ஜெயமாகும் ஒரு பெரியமனுஷரால் உதவியாகும் பலமான உத்தியோகங் கிடைக்கும் வியாபாரம் விர்த்தியாகும் தனலாபங்கிடைக்கும் வீட்டுக்காரியஞ் ஜெயமாகும்.

211-வது.

சித்தத்தில்நினைத்ததொரு யெண்ணங்கூடும்
ஜெயமாகுங்குடும்பமது விர்த்தியாகும்
புத்திரருமிகப்பெருவாய் பொருளுஞ்சேரும்
போரேனென்றவெளியூரின் ஆசைநீக்கி
வுத்தமனேவுன்னிடத்தில் தேவபூசை
வுறுதிகொண்டபெண்ணத்தால் போகொணாது
பத்தியாய்நாற்பத்தி ஐந்துநாளும்
பாலகனேஒழியவகை கூடும்பாரே.

வ-ம். நீ இருநூற்றிபதினொன்றை தொட்டதால் நினைத்தகாரியங்கைகூடும் குடும்பவிர்த்தியாகும் புத்திரலாபமுண்டு ஆனால் நீ வெளியூர்போக எண்ணங்கொண்டிருக்கிறாய் அதுகூடாது ஏனென்றால் உன்னிடத்தில் தேவபூசையிருக்கிறது அதினால் இன்னம் நாற்பத்தைந்துநாள் கழிந்தால் கைகூடும் வுத்தமம்.

212-வது.

மன்னவனேநீதொட்ட லக்கத்தாலே
மனவருத்தம்பொருள்சேரும்
சொன்னபடிபொருள்சேரும் குடும்பவிர்த்தியாகும்
சுத்தமுள்ளவீட்டுக்காரியமும்நன்மை
வுன்னுடையஜென்மத்தை விட்டுரோகம்
ஒழிந்திடுவான்யின்னமெட்டு தினத்திற்குள்ளே
தனமையுடன்தொடுகுறி னுண்மைபாரு
தப்பினுல்சாஸ்திரத்தை சுட்டுப்போடே.

வ-ம். நீ தொட்டலக்கம் இருநூத்தி பனிரெண்டாகையால் மனக்கவலைதீரும் தனலாபங் கிடைக்கும் குடும்பவிர்த்தியாகும் வீட்டு காரியஞ்செயமாகும் உன்னுடைய ஜென்மத்தில் இராகு யிருக்கிறான் இன்னம் எட்டுதினத்தில் ஒழிகிறான்.

213-வது.

இருநூத்திபதிமூன்றை தொட்டதாலே
 யெத்தொழிலைசெய்தாலும் அதிகலாபம்
உறவற்றுப்போனபொருள் வந்துசேரும்
 உத்தமனே வெளியூரில் கிடைக்கும்லாபம்
தெரிவித்தேன்உனக்கெதிரி யொருவனுண்டு
 தம்பியடாஅவ்னையும் நீ நம்பவேண்டாம்
அறிவித்தேன்தைரியத்தை விடநீவேண்டாம்
 அப்பனேபொருளொன்று நஷ்டமாமே.

வ-ம். நீ தொட்டகுறியால் லாபங்கிடைக்கும் கைவிட்டுப்போன பொருள் வரும் வெளியூரில் லாபங்கிடைக்கும் அதனால் உனக்கு எதிரி ஒருவனுண்டு அவனை நம்பவேண்டாம் நீ தைரியம் விடவேண்டாம் ஆனாலுனக்கு முன்னுதாய் ஒருபொருள் நஷ்டம்வரும் அதற்கும் பயப்படவேண்டாம் பின்னால் லாபங்கிடைக்கும் உத்தமம்

214-வது.

இருநூத்திபதினாலை தொட்டதாலே
 யெவ்வளவோ ஒருவருஷம் வருத்தப்பட்டாய்
குறைவன்றிகேட்டநாள தொடங்கியப்பா
 கொற்றவனேயேழுநாள் கழிந்துதானால்
பிரியமுடன்ரெண்டாண்டு குறைவேயில்லை
 பட்டதொருதுன்பமெல்லாம் விலகிபோச்சி
மருமமெல்லாம்வழியாக சொன்னேனப்பா
 மைந்தனேவிட்டதொழில் மகிழ்ந்துசெய்யே.

வ-ம். நீ தொட்டது என்னவென்றால்நீ ரொம்பவும்ஒருவருஷம் வருத்தப்பட்டாய் வருத்தம் நீங்கிவிட்டது இப்போது நீ கேட்டநாள் தொடங்கி இன்னம் ஏழுநாள் கழிந்தால் இரண்டு வருஷம் குறை வில்லாமலிருப்பாய் நீ முன்செய்த தொழிலை விட்டு இருக்கிறாய் அதை செய்யவும் சகலமும் நன்மையாகும் உத்தமம்.

221-வது.

மண்டலத்தின்தொடுகுறியின் மருமங்கேளீர்
 மருமமாய்நினைத்தபொருள் முடியாதப்பா
விண்டதப்பாயெத்தொழிலும் பலியாதென்று
 வீணாகப்பலர்சொல்லைக் கேட்கவேண்டாம

சண்டையதுசினேகிதத்தில் நேருமப்பா
சனியனுடகூத்தாலே வுந்தனுக்கு
கண்டதொருயிம்மாதங் கழிந்துதானால்
கண்மணியேகவலையெல்லாங் கடந்துபோமே.

வ-ம். நீ தொட்டக்குறி இருநூத்தியிருபத் தொன்றுகையால் நினைத்தகாரியம் கைகூடாது எந்தவேலை செய்தாலும் பலியாது ஒருவர்சொல்லை கேழ்க்கவேண்டாம் சினேகிதகாரியத்தில் சண்டையாகும் ஆனால் நீ கேட்டநாள் துடங்கி முப்பதுநாள்போனால் பலிக்கும் மத்திபம்.

222-வது.

தொட்டதோர்குறியினாலே துன்பமும்மிகவுண்டாகும்
மட்டதுயெடுத்தவேலை மத்திபம்பாபம்தீரும்
கேட்டதோர்பெண்ணமூந்தான் கருத்தினில்கூடிவாழும்
விட்டிடஅந்தயெண்ணம் வெகுசுகமென்றார்முன்னோர்.

வ-ம். நீ இருநூத்தி இருபத்திரண்டை தொட்டதால் எந்த வேலைசெய்தாலுங் கைகூடாது அபாயம்வரும் உன்மனதில் கெட்ட எண்ணமிருக்கிறது அந்த எண்ணத்தை விட்டுவிடு சுகம்.

223-வது.

தொட்டதோர்குறியினாலே துலைந்ததுதுன்பமெல்லாம்
விட்டதுகிரகமெல்லாம் வந்ததுநல்லகாலம்
சட்டெனப்பதறவேண்டாம் சகலமுங்கைதான்கூடும்
பொட்டெனவுரைத்தவாக்கை புத்தியில்மதித்துபாரே.

வ-ம். தொட்டகுறி இருநூத்தி இருபத்திமூன்றுகையால் நினைத்தகாரியம் ஜெயமாகும் உன்னுடைய கிரகமெல்லாம் நன்றாயிருக்கிறது தனலாபங்கிடைக்கும் குறைவில்லை உத்தமம்.

224-வது.

எண்ணியேதொட்டலக்கம் எடுத்ததோர்வேலைசாயும்
நண்ணியேஒருவருக்கு நல்லுபகாரஞ்செய்ய
எண்ணினையெண்ணந்தன்னை பகர்ந்துநீயறிந்துசொல்ல
திண்ணமும்வாராதப்பா ஜெயமதுபலிக்கும்பாரே.

வ-ம். நீ இருநூத்தி இருபத்திநாலைத் தொட்டதால் அட்டியில்லாமல் 'எடுத்தவேலைமுடியும் ஆனால் நீ ஒருவருக்கு உபகாரஞ்செய்ய எத்தனித்திருக்கிறாய் அதை ஆலோசித்துசெய்யவும் நன்மையாகும்.

231-வது.

பலித்ததுதொட்டலக்க பகையதுதுலைந்துபோச்சி
செலித்ததுநினைத்தவேலை கொஞ்சநாள்கழியக்கூடும்
சலித்திடவேண்டாமையா சாஸ்திரமொழியைப்பாரு
நிலைத்திதைநம்பினோர்க்கு நாளுமென்சுகமென்றாரே.

வ-ம். நீ இருநூத்திமுப்பத்தொன்றை தொட்டதால் நினைத்த காரியஞ் செயமாகும் நீ ஒருகாரியத்தைப்பற்றி நினைத்திருக்கிறயது யின்லைங் கொஞ்சநாளில் கைகூடும் பயப்படவேண்டாம் உத்தமம்

232-வது.

இக்கட்டுநீந்துலேக்குபோச்சி எடுத்ததோர்பேரஞ்சாயும்
எக்கெட்டும்கீர்த்திபெற்ற தீரமுமிகவுண்டாகும்
பக்குவமானநாட்டில் பலித்ததுன்கிரகமெல்லாம்
சிக்கெனவாழ்க்கையானல் செல்வமும்பெருகுமென்றூர்

வ-ம். நீ தொட்டது இருநூத்தி முப்பத்திரண்டாகையால் மன வருத்தம் நீங்கிவிட்டது ஜெபகால முதவியாச்சு கிரகங்கள் நல்லவீட் டிலிருக்கிறது தனலாபங்கிடைக்கும் உபாயமாய் வரவும்.

233-வது.

அறிந்திடுவாய்நீதொட்ட குறியின்உண்மை
அவட்டுதப்பாவுன்மனதில் விசனமொன்று
தெரிந்திடுவாய்வெளியூரின் விசனமொன்று
தக்கசினேகிதன்பிரிந்த விசனமொன்று
துறந்திடுவாயின்னெருவன் சினேகமாவான்
துஷ்டனப்பாவுனக்கெதிரி அவனேயாகும்
பிரிந்திடுவாய்அவனையும்நீ விட்டுநீக்கு
பேசியதுன்பமெல்லாம் விலகிப்போமே.

வ-ம். நீ தொட்டகுறி இருநூத்தி முப்பத்தி மூன்றுகையால் உன்மனதில் விசனமொன்று வெளியூர் விசனமொன்று நல்லசினேகி தனைப்பிரிந்த விசனமொன்று யிருக்கிறது ஆனல் இப்போது ஒரு சினேகிதத்தைவிட்டு நீங்கவும் பலிக்கும்.

234-வது.

ஜெயமதுபலித்துபோச்சி சித்தமுங்கலங்கவேண்டாம்
நயமுடனிரண்டுபக்கம் லாபமுங்கிடைக்குமப்பா
தயவுள்ளோன்நல்ல தர்மவான்சினேகமாவான்
பயமதுயில்லைசத்ரு பாவியுந்திலவானென்றூர்.

வ-ம். இருநூத்தி முப்பத்திநாலைதொட்டதால் உனக்கு இர ண்டுபக்கம் லாபங்கிடைக்கும் நல்ல சினேகிதர் கூடுவார் அதனல் உன் மனக்கவலைதீரும் உன் சத்துரு நாசமாவான் ஜெயமாகும்.

241-வது.

கேளப்பா தொட்டதொரு குறியைச்சொல்வேன்
கண்மணியேவிவாகத்தின் விசனமொன்று
கேளப்பாவெளியூரின் விசனமொன்று
கருத்துள்ளசினேகிதன்மேல் விசனமொன்று

கேளப்பாவுன்னுடைய குடும்பந்தானே
 கெடுதிசெய்யவுனக்கெதிரி ஒருவனுண்டு
கேளப்பா அவனைநீ விலக்கிவிட்டால்
 கவலையெல்லாமொழிந்துசுகப் படுவாய்தானே

வ-ம். நீ தொட்டகுறி இருநூற்றிநாற்பத்தி ஒன்றாகையால் உனக்கு விவாகத்தின் விசனமொன்று இன்னம் உன் குடும்பத்தில் ஒருவனிருக்கிறான் அவன் கெட்ட எண்ணம் வைத்திருக்கிறான் அவனை நீக்கினால் சுகப்படுவாய் நம்பு.

242-வது.

குறையதுயில்லையென்று கூறியமொழியைநம்பு
பெருமையாய்வீட்டிற்சொன்ன பேச்சுமுடியுமப்பா
மருமமுங்கவலைதீரும் மாற்றவர்தன்னைக்கொண்டு
வருவனயோசித்தாலுந் தாட்டியாய்முடியுந்தானே

வ-ம். நீ தொட்டலக்கம் இருநூற்றி நாற்பத்திரண்டாகையால் மனக்கவலை தீரும் வீட்டில் யோசித்தகாரியம் ஜெயமாகும் இல்லாவிட்டால் இன்னம் யாரையாவது கொண்டுயோசித்தாலும்முடியும் எதிரி நாசமாவான்.

243-வது.

இருநூற்றிநாற்பத்தி மூன்றைதொட்டாய்
 எத்தொழிலைச்செய்தாலும் பலிக்குமப்பா
தருணத்தில்தனலாபந் தேகாரோக்கியம்
 தம்பியடாவிட்ட காரியமுமாகும்
அறியவேவுத்தியோகம் புத்திரபாக்கியம்
 அப்பனேதடையின்றி யாகுமப்பா
தெரியவேதைரியத்தை விடவேவேண்டாம்
 தடையின்றிநினைத்ததொழில் செய்துபாரே.

வ-ம். நீ தொட்ட சாஸ்திரத்தில் புத்திரபாக்கியம் உண்டாகும் தேகசவுக்கியமாகும் உத்தியோகங்கிடைக்குந் தனலாபங்கிடைக்கும் எந்தவேலைசெய்தாலும் ஜெயமாகும் விபரித்து செய்யலாம் தைரியம விடவேண்டாம் நம்பு உத்தமம்.

244-வது.

சித்தமதுகலங்காதே அப்பாகேளு
 செல்வமதுபெருகுமடா தொட்டலக்கம்
உத்தமனேகிரகங்கள் பலனைக்கூட்டும்
 உறவுகொண்டசினேகிதனை நம்பவேண்டாம்
பத்தியவான்உனைக்கெடுக்க யெண்ணங்கொள்வான்
 பாலகனேஅவனுறவை நீக்கிவிட்டால்
எத்தொழிலைச்செய்தாலும் பலிக்குமென்று
 வியம்பியசகாதேவர் நூலைநம்பே.

வ-ம். நீ தொட்டலக்கம் இருநூத்திநாற்பத்தினாலாகையால்உன் பீடைதுலேத்துபோச்சி கிரகங்கள் நல்லதாயிருக்கின்றன நீ ஒருவனை நம்பியிருக்கிருய் அவன் மனதில் கெட்ட எண்ணம்வைத்திருக்கிருன் அவனை நம்பவேண்டாம் உன்மனம்போலே செய்தால் பலிக்குங் குறையில்லே.

311-வது.

பாலகனேதொட்டலக்கம் பணத்தினிடவிசனமொன்று
சாலவேவுனக்குமெத்த சஞ்சலம்வெளியூராலே
சீலமாம்குலதேவதைக்கு சிறப்புடன்பூசைசெய்ய
மேலதுபெறுவாயப்பா மர்மமும்வெளியாய்சொன்னேன்

வ-ம். நீதொட்டலக்கம் மூன்னூத்தி பதினென்றுகையால் உன க்கு பணத்தினிட விசனமொன்று யிருக்கிறது வெளியூர்விசனமொ ன்றிருக்கிறது அதுகளெல்லாந் துலேவதற்கு உன்னுடைய குலதேவ தைக்கு பூசைபோடு கைகூடும்.

312-வது.

மனமதுகவலேவேண்டாம் மருவியபொருளுஞ்சேருங்
கனமுடன்குடும்பவிர்த்தி தளிப்புறபுத்திருண்டு
வினேமுதல்மெய்யில்வாழும் வியாதியும்பறந்துபோகும்
இனமுடன்தொட்டவேலே யேகமாய்பலிக்கும்பாரே.

வ-ம் மூன்னூற்றிபனிரெண்டை தொட்டதால் மனக்கவலே தீரும் தனலாபங்கிடைக்கும் குடும்பவிர்த்தியாகும்புத்திரலாபமுண்டு திரேகத்தின் வியாதிதீரும எந்தத்தொழிலே செய்தாலும் பலிக்கும் தைரியம் விடவேண்டாம் உத்தமம்.

313-வது.

பணமென்றஆசையது மெத்தவுண்டு
 பலிக்கும்நினேத்தபடி பயப்படாதே
குணமில்லாவுனக்கெதிரி யனேகருண்டு
 கோடிபேர்யெதிர்த்தாலு முனக்கேலாபம்
மனமறியஉன்தன்குல தேவதைக்கு
 மாதமொருபூசையது புரிந்தாயானல்
யினமாகசகலமுந்தான் மனம்போல்கூடும்
 யேதொன்றுமஞ்சாதே யீசன்சாட்சி.

வ-ம் நீ மூன்னூற்றிபதிமூன்றை தொட்டதால் உனக்கு பணத் தினிட ஆசையிருக்கின்றது அது தடையில்லாமல் பலிக்கும் ஆனல் உனக்கு லாபங்கிடைக்கும் நீ உன்குலதேவதைக்கு மாதத்திற்கொரு தரம் பூசைபோடு கைகூடும் உத்தமம்.

### 314-வது.

உன்னிடகிரகஙன்மை உடனேமுன்விவாகங்கூடும்
தன்னிகராகவாழ்வாய் தர்மமுமனதிலெண்ணு
விண்ணவருதவியுண்டு வழுத்திடுஞ்சோமவாரம்
எண்ணியேவிரதங்கார்க்க எத்தொழில்பலிக்குமென்றார்.

வ-ம் நீ முன்னூத்திபதினுலே தொட்டதால் நினைத்தகாரியம் முடியும் கலியாணங்கூடும் சம்பத்தாய்வாழ்வாய் தர்மம்பண்ணு நீ திங்கட்கிழமைதோறும் விரதமிரு ஈஸ்பரன் துணையிருப்பார்.

### 321-வது.

வருத்தமுமிகவுண்டாகும் வாடியேமெய்யுஞ்சோரும்
கருத்துடன்வேதைசெய்தாலும் கைப்பொருள்விரயமாகும்
இருபத்தியொன்றுமாதம் யேகபின்சுகமுண்டாகும்
தெரிவித்தமொழியைநம்பி தைரியங்கொண்டுநீயே.

வ-ம் முன்னூத்தியிருபத்தியொன்ற தொட்டகால் மனவருத்தமாயிருக்கிறாய் நீ நினைத்தகாரியம் மத்திபம் துணிவாய் ஒருதொழில் செய்தாலும் நஷ்டம் எந்தவேலைசெய்தாலும் விசாரித்துசெய் உனக்குயிருபத்தொருமாதம் போனபிறகு சுகமாகும் மத்திபம்.

### 322-வது.

உள்ளத்தின்கவலைதீரும் உன்னுடன்பிரந்தோராலே
தெள்ளியலாபஞ்சேரும் திடமுடன்வருஷந்தன்னில்
கன்மமுமில்லைசொன்னேன் கையதுவிட்டவேலை
வள்ளலின்கிருபையாலே வருகுமென்றுரைத்திட்டாரே.

வ-ம். நீ தொட்டலக்கம் முன்னூத்தி யிருபத்திரண்டாகையால் நினைத்தகாரியம் அண்ணன்தம்பியால் முடியும் இந்த வருஷத்தில் காரியஞ்சித்தியாகும்போனவேலைவரும் நீ எத்தனஞ்செய்யே உத்தமம்.

### 323-வது.

சந்தேகமில்லைசொன்னேன் சாற்றிடும்வெளியூர்லாபம்
வந்திடும்பெதிரிநாசம் வருத்தமுங்கவலைதீரும
சிந்தையுகளிக்கநீயுஞ் சொல்லடையாளங்களு
அந்தமாயிடதுகண்மேல் ஆனதோர்மச்சம்பாரே.

வ-ம் நீ முன்னூத்தி யிருபததிமூன்றை தொட்டதால் எதிராளியை வெல்லுவாய் மனக்கவலைதீரும் வெளியூரிலிருந்துலாபங்கிடைக்கும் குலதேவதைக்கு பூசைபோடவும் இதற்கடையாளம் உன்னுடைய இடதுகண்மேல் மச்சமிருக்கிறது.

பகைவனுந்தலைந்துவிட்டான் பலித்திடும்லாபம்மேலாம்
வகையுடன்கெலிப்பாய்சண்டை வந்ததோரெண்ணஞ்சாயும்
தகமையாய்தர்மம்பண்ணு தனித்திடபகையும்வேண்டாம்
புகழதைகடந்துமுன்னோர் உரைத்தசொல்நம்பிப்பாரே.

வ-ம் நீ முன்னூத்தி யிருபத்தினை தொட்டதால் உன்பகை யாளி தலைந்துவிட்டான் நினைத்தகாரியமுடியும் சண்டைகெலிப்பாய் தர்மம்பண்ணு ஒருவரையும்பகைக்கவேண்டாம்முன்னோர் எழுதின நூலைநம்பு.

331-வது.

நாடியேதொட்டலக்கம் நம்பினஎண்ணஞ்சாயும்
கூடியேலாபங்காணும் குடும்பமும்விர்த்தியாகும்
தேடியேமனையாள்செய்யுந் தர்மமுமுனக்கேலாபம்
வாடிடவேண்டாமுன்னோர் வயித்தியநூலைநம்பே.

வ-ம். நீ தொட்டலக்கம் முன்னூத்திமுப்பத்தொன்றானபடியால் நினைத்தகாரியஞ்ஜெயமாகும் லாபங்கிடைக்கும்குடும்பவிர்த்தியாகும் நீ தர்மவானாயிருப்பாய் தைரியம்விடவேண்டாம் உன் பெண்சாதி செய்கிற தர்மமுனக்கு சித்தியாகும் சுபம் உத்தமம்

332-வது.

எண்ணவுமுடியாதின்ன மெத்தொழில்பலித்திடாது
நண்ணியயிரண்டுஆண்டாய் நவிலொணாநஷ்டப்பட்டாய்
உன்னிடநேசந்தானும் வுனக்கெதிர்வைரியானான்
மன்னனேவுண்மைசொன்னேன் மனமதுகலங்கிடாதே

வ-ம். நீ முன்னூத்தி முப்பத்திரண்டை தொட்டதால் நினைத்த காரியமாகாது எந்தவேலை செய்தாலும் நஷ்டம் உன்சிநேகிதனே உனக்கு வைரியாயிருக்கிறான் தைரியம்விடாதே மத்திபம் இரண்டு வருஷமாய் ரொம்பவுங் கஷ்டப்பட்டாய்.

333-வது.

நினைத்ததோர்வேலைசாயும் நம்பிநீதொட்டலக்கம்
கனத்தோர்சினேகங்கூடுங் கடவுளின்கிருபையாலே
மனத்திடங்கொள்வாய்நீதான் மைந்தனேகுலதேவதைக்கு
யினமுடன்பூசைசெய்ய யேந்துவாய்புத்ரலாபம்.

வ-ம் நீ தொட்டகுறியால் லாபங்கிடைக்கும் நினைத்த காரியம் முடியும் நல்லசினேகிதங்கூடும் புத்திரபாக்யமுண்டு குலதேவதைக்கு பூசைபோடவும்.

334-வது.

பலபலவெண்ணம்வேண்டாம் பாலாநீதொட்டலக்கம்
கலகலவென்வேலாபங் கைதனில்வந்துகூடுஞ்
சிலபெரியோர்களாலே சின்னகிதம்வந்துகூடும்
நலமதுமனதில்கொண்ட நாட்டமும்பலிக்கும்பாரே.

வ-ம். நீ முன்னூத்தி முப்பத்தினாலே தொட்டதால் மனதில் நினைத்தகாரியம்முடியும் கைவிட்டுப்போனபொருள் வரும் தனலாபங்கிடைக்கும் நல்லசின்னகிதரால் உதவியாகும் பலயோசனைவேண்டாம்

34 -வது.

உன்னிடமனதில்மெத்த உருகுதுவிசனமொன்று
பின்னியேபித்தவாய்வு பிரட்டுதுதிரேகமெல்லாம்
சொன்னசொல்தவறாதிடாதே சிவனைநீதியானஞ்செய்தால்
நண்ணியேபுத்திரலாபம் நலந்தரும்பின்னாலென்றார்.

வ-ம். நீ முன்னூத்திநாற்பத்திலொன்றை தொட்டதால் உன்மனதில் விசனமொன்று யிருக்கிறது இன்னம் உன்னுடம்பில் பித்தவாய்வு தங்கியிருக்கிறது நீ சிவனை தியானஞ்செய் சகலமும்துலையும் புத்திரலாபமுண்டாகும் இதுகள் பின்னால்சுகம் உத்தமம் பயப்படவேண்டாம்.

342-வது.

நினைத்ததோர்எண்ணஞ்சாயும் நம்பிடுமேற்குதிக்கில்
தனத்துடன்லாபங்காணுந் தளர்ந்தமுன்கஷ்டந்தீரும்
மனதிடங்கொள்வாய்நீயும் மருமமும்வெளியாய்சொன்னேன்
இனமுடனிரண்டுமாதம் போகபின்சுகமுண்டாமே.

வ-ம். நீ முன்னூத்தி நாற்பத்திரண்டை தொட்டதால் நினைத்தகாரியஞ்சித்தியாகும் மேற்குதிசையில் லாபமுண்டு நீ படுங்கஷ்டம் தீரும் இன்னம் இரண்டுமாதத்தில் சுகமாகும் உத்தமம் பயப்படவேண்டாம்.

343-வது.

கோபஞ்சண்டாளங்கொண்டு கூடியபொருளைத்தோற்றாய்
தாபமும்வேண்டாமப்பா தானதுவந்துகூடும்
சாபமாய்ரொம்பநாளாய் சஞ்சலப்பட்டுவந்தாய்
லாபமும்பெருவாய்ஐந்து மாதமும்கழிந்துபாரே.

வ-ம். நீ முன்னூத்தி நாற்பத்திமூன்றை தொட்டதால் மனம் கோபத்தினால் கைவிட்டுப் போனபொருள் வரும் நீ ரொம்பநாளாய் துன்பப்பட்டுக்கொண்டுவந்தாய் இன்னம் ஐந்துமாதம்போனால் சுகப்படுவாய் அதுபரியந்தம் நீ நினைத்தவேலையைசெய்யவும் ஜெயமாகும் பயப்படவேண்டாம்.

344-வது.

எண்ணமும்பலிக்குமப்பா எத்தொழில்லாபங்கானும்
திண்ணமாய்விட்டநேசன் திரும்பியும்வந்துகூடும்
வண்ணமாய்ஸ்திரீயினலே வாழ்வதுமிகவுண்டாகும்
உண்மையாயிதனைநம்பி ஒருவர்மேற்பகைகொள்ளாதே.

வ-ம். நீ முன்னூத்தி நாற்பத்திநாலை தொட்டதால் உன்வீடை துலைந்து விட்டது எந்தவேலை செய்தாலும் லாபங்கிடைக்கும் ஒரு சினேகிதனைப்பிரிந்திருக்கிறாய் அவன் மறுபடியும் சினேகமாவான் இன்னம் ஒரு ஸ்திரீயினல் சவுக்கியமுண்டாகும் உன்பகையாளிநாசமாவான் ஆனல் நீ ஒருவரையும் விஷ்டூரஞ்செய்து கொள்ளாதே உத்தமம்.

411-வது.

கஷ்டமுமிகவேதோணும் காண்பதுநிராசையாகும்
துஷ்டரின்சினேகிதத்தாலே தோஷமாம்பகையுநேரும்
நஷ்டமாமிவைகளெல்லாம் நாடாமல்விலகியோடும்
இஷ்டமாங்குலதேவதைக்கு வியல்புடன்பூசைசெய்வாய்.

வ-ம். நீ நானூத்திபதினென்றை தொட்டதால் நினைத்தகாரியம் கைகூடாது ஆசைநிராசையாகும் ஒருசினேகிதனல் அபாயம்வரும் அவனைநம்பவேண்டாம் நீ உன் குலதேவதைக்கு பூசைசெய்ய நாளுக்குநாள் கைகூடும் மத்திபம்.

412-வது.

கன்னியின்ஆசையாலே கவலையும்படுகுறாய்நீ
இன்னமுஞ்சிலநாள்போனல் இஷ்டததின்படியேகூடும்
தன்னிகராகவேதான் தரித்திடும்புத்திரலாபம்
உன்னிடகுலதேவதைக்கு உகந்துநீபூசைசெய்யே.

வ-ம். நீ தொட்டலக்கம் நானூத்தி பனிரெண்டாகையால் நினைத்தகாரியம் கைகூடும் ஒரு ஸ்திரீ சம்பந்தத்தைப்பற்றி விசனப்படுகிறாய் அது இன்னம் கொஞ்சத்திற்குள் கைகூடும் புத்திரலாபமாகும் குலதேவதைக்கு பூஜைசெய்யவும்.

413-வது.

சித்தமும்பணத்தினசை நீடியுன்மனதில்வாட்டும்
உத்தமஸ்திரீயினலே வுதவியாம்பொருளுஞ்சேரும்
பத்தியகிரகநன்மை பலத்ததோர்சினேகங்கூடுஞ்
சித்தியாம்ஜாதகத்தில் சொல்மொழிதப்பிப்போச்சே.

வ-ம். நீ தொட்டலக்கத்தின் விபரங்கேள் உனக்கு பணத்தினுடைய விசனமொன்று யிருக்கிறது ஒருஸ்திரீயால் பொருளுதவியாகி அந்த விசனந்தீரும் ஒருபெரியமனுஷரால் உதவியாகும் வெளியூரில் வேலைகிடைக்கும் ஆனல் உன்சாதகம் ஒன்று தப்பியிருக்கிறது உத்தமம்.

414-வது.

பட்டவுந்துன்பந்தன்னை பகர்ந்திடமுடியாதப்பா
தொட்டதோர்கிரகம்போச்சு துணையதுயினிமேலாச்சு
இஷ்டமாய்மனதில்கொண்ட யெண்ணமும்ஒருமாதத்தில்
கெட்டியாய்பலிக்குமென்றே காண்டீபர்தம்பிசொன்னார்.

வ-ம் நீ ரொம்பவும் வருத்தப்பட்டாய் அந்தவருத்தம்நீங்கிவிட்டது ஆனால் உன்மனதில் ஒரு எண்ணம்வைத்திருக்கிறாய் அது இன்னம் ஒருமாதத்தில்கைகூடும் குலதேவதைக்குபூசைசெய்யவும் இந்த நூல் பஞ்சவர்களில் ஒருவராகிய சகாதேவர் சொன்னது உத்தம.

421-வது.

பொருளது கைவிட்டேகி புலம்பிநீவாடுகின்றாய்
அருளுடன்வந்துசேரும் அயலூரில்பலனைக்காட்டும்
மருமொழிகவலைவேண்டா மைந்தனைபெற்றுவாழ்வாய்
குருமொழியாகநம்பி குறிப்பையறிந்துகொள்ளே.

வ-ம் நீ தொட்டது என்னவென்றால் கைவிட்டுபோன பொருளைப்பற்றி விசனப்படுகிறாய் அது கைகூடும் வெளியூரில் உதவியாகும் புத்திரலாபமாகும் விசனப்படவேண்டாம்.

422-வது.

சென்றதோர்வருடமூன்றுஞ் சிறுமையால்மெய்யதாகும்
இன்றுடன்பீடையெல்லாம் ஒழிந்திடும்பயப்படாதே
நன்றெனயெடுத்தவேலை நம்பிசெய்கவலைவேண்டாம்
வென்றுநீவாழ்வாயப்பா வேணதோர்புத்திரரோடே.

வ-ம் நீ மூன்றுவருஷமாய் மிகவும்வருத்தப்பட்டாய் அந்தவருத்தம் நீங்கிவிட்டது எந்தவேலைசெய்தாலும் பலிக்கும் விசாரித்துசெய் புத்திரலாபமுண்டு உன் குலதேவதைக்கு பூசைசெய்யவும்

423-வது.

குறைவதுயில்லைசொன்னேன் கொண்டதோர்எண்ணஞ்சாயும்
பெருகுவாய்அதிகலாபம் பின்னொருபயமும்வேண்டாம்
திரமுடன்யெத்தொழிலும் தீரமாய்செய்வாயானால்
அரியவேபலிக்குஞ்சொன்னேன் ஆயன்தன்னருளினாலே.

வ-ம் நீ நினைத்தகாரியம் முடியும் எந்தத்தொழில் செய்தாலும் அதிகலாபங்காணும் விசாரித்துசெய் பயப்படவேண்டாம் உத்தம்.

424-வது.

நம்பினயெண்ணமெல்லாம் நஷ்டத்தில்அழிந்துபோச்சி
வெப்பியேவாடுகின்றாய் வீட்டிலுஞ்சுகமில்லாமல்
தெம்புடன்வாழப்போறாய் தைரியம்விடவேவேண்டாம்
உம்பரின்சாட்சியாக உரைத்தசொல்நம்பிப்பாரே.

வ-ம் நீ தொட்டலக்கமென்னவென்றால் நீரொம்பவும்வருத்தப் படுகிறாய் நினைத்தவேலையெல்லாம் நஷ்டமாய்விட்டது வீட்டிலுஞ் சுகமில்லை ஆனால் இனிசுகப்படுவாய் பயப்படவேண்டாம்

431-வது.

பாலனேபயப்படாதே பலித்திடும்நினைத்தவேலை
மேலெனஅண்ணன்தம்பி மகிழுடன்கூடுவார்கள்
காலமும்நல்லதாச்சு கிரகமும்விட்டுப்போச்சி
சீலமாய்வாழ்வாயப்பா சந்தேகமில்லைதானே.

வ-ம் நீ நினைத்தகாரியஞ் சித்தியாகும் மனக்கவலைதீரும் அண்ணன்தம்பிவந்துகூடுவார்கள் உன்கிரகங்கள்நல்லதாயிருக்கின்றது சந்தேகப்படவேண்டாம் உத்தமம்.

432-வது

மனதினில்நினைத்தவேலை மகிழுடன்வந்துகூடும்
கனமுமேவெளியூர்போக கருத்தினிலெண்ணங்கொண்டாய்
துணையெனநம்பவேண்டாம் துணிந்துசெய்மனதின்போல
குணமுடன்மனம்போலண்ணன் கூடுவதில்லையென்றாரே

வ-ம் நீ மனதில்நினைத்தவேலை முடியும் நீ வெளியூர்போகயோசித்திருக்கிறாய் தடையில்லாமல்போகலாம ஒருவரையும் நம்பவேண்டாம் நீ அண்ணன் தம்பியுடன் பகையாயிருக்கிறாய் உத்தமம்.

433-வது.

சங்கையுமில்லைசொன்னேன் சகலமுங்கைதான்கூடும்
மங்களமாகவாழ்வாய் மற்றொருநேசராலே
பொங்கமாவீட்டுவேலை புகழ்ந்துமேமிகவுண்டாகும்
வங்கெனநாளுக்குநாள் தழைத்திடும்புத்திரலாபம்.

வ-ம் வியாபாரம் விர்த்தியாகும் தனலாபங்கிடைக்கும் நல்ல சினேகிதரால் வீட்டுகோரியம் நன்மையாகும் புத்திரலாபங் கிடைக்கும் பயப்படாதே நாளுக்குநாள் சுகமாகும்

434-வது.

கையதுகூடும்வேலை கஷ்டமும்விலகிப்போச்சி
துய்யனேஉனதுவீட்டுத் துயரமும்இனிமேலில்லை
ஐவரின்பிள்ளையதம்பி அருள்சகாதேவர்வாக்கை
மெய்யெனநம்பிமாயன் மேன்மையாயுரைத்தவாக்கை.

வ-ம். நீ நினைத்தகாரியம் முடியும் வீட்டு கஷ்டமுந்தீரும் கடவுளை பூசைசெய்யவும்.

441-வது.

கிரகமும்பொல்லாதப்பா கவலைமிகவுண்டாகும்
பிரியமாய்த்தேடினவுன் பொருளதுவிலகிப்போச்சி

வருமெனவெண்ணம்வேண்டாம் வழுத்திடும்மாதமேழில்
உரையதுதவறினுக்கால் ஓங்கியீராண்டிலாமே.

வ-ம் நீ நினைத்தகாரியம் மத்திபம் உன்கிரகம் கெட்டதாயிருக்கிறது உன் கைவிட்டு ஒருபொருள்போனது அந்த பொருள்வந்தால் ஏழுமாதத்திலாவது இரண்டுவருஷத்திலாவது வரவேணுங் தைரியம் விடாதே.

442-வது

நலியெனும்பிணிதான்மெய்யில் நாளுமேயுன்னைவாட்டும்
சலியாமல்நீசெய்ததர்மம் சகலமும்நன்மையாகும்
குலமெனுங்தேவதைக்கு கூட்டியேகிரகபூசை
நலமுடன்செய்வாயாகில் நாளுமேசுகமென்றாரே.

வ-ம் நீ எப்போது உடம்பு நலியாயிருக்கிறாய் இருந்தபோதிலும் உன்னுடையதருமம் காப்பாற்றுகிறது இன்னம் நீகுலதேவதைக்கும் நவக்கிரகத்திற்குப் பூசைசெய்வாயாகில் சகலமும் நன்மையாகும் உத்தமம்.

443-வது.

முன்னுதாய்பலிக்கும்லாபம் முதல்வன்றன்கிருபையாலே
பின்னொருபொருளுநஷ்டம் பிரிந்திடுமஞ்சிடாதே
யின்னொருமாதமட்டும் யிருக்குதுகெட்டகாலம்
யுன்னிடசுகமேயென்று பேசியமெய்ழியைநம்பே.

வ-ம் நீ நினைத்தகாரியம் பலிக்கும் பலித்தபோதிலும் ஒரு பொருள் நஷ்டமாகும் கிரகங்கள்கெட்டதாயிருக்கிறது இன்னம்ஒரு மாதங் கழித்தால் சுகப்படும் தைரியம்விடவேண்டாம்.

444-வது.

ஜெயமுடனேயெத்தொழிலும் பலிக்குமப்பா
சிந்தையிலேபயமென்ற கவலைநீக்கு
நயம்பெறுவாய்பந்துவுடன் கூடிவாழு
நாட்டமாய்முன்செய்த தொழிலைநப்பு
தயவுடனேஆராய்ந்து கிருபையாலே
தான்வாழ்வாயென்று சகாதேவர்சொன்னார்
ஜெயமாகயிந்நூலை நம்பினோர்கள்
சிரஞ்சீவியாயுலகில் வாழ்வர்தானே.

வ-ம் நீ நாராத்திகாற்பத்தினாலை தொட்டதால் நினைத்தகாரியம் சித்தியாகும் உன்மனதில் பயமிருக்கிறது அந்தபயத்தை விட்டுவிடவும் உன்பந்துக்களுடன் கூடிவாழவும் நலம் நீ முன்செய்ததொழிலை விட்டிருக்கிறாய் அதைசெய்யவும் சுகமாகும்.

தொடுகுறி சாஸ்திரம்-முற்றிற்று.

---

ஸ்ரீராமஜெயம்

நன்மை தீமை அறியும்படியான

இராமதேவர் ஆஞ்சநேயருக்கு உபதேசித்த

# உத்தமமத்திபசாஸ்திரம்.



| | | | | | |
|---|---|---|---|---|---|
| 220 | 130 | 64 | 432 | 610 | 216 |
| 5 | 27 | 72 | 520 | 412 | 272 |
| 8 | 45. | 37 | 96 | 142 | ✕ |
| 0 | 14 | 54 | 1[illegible]4 | 148 | ✕ |
| 112 | 56 | 84 | 214 | 334 | ✕ |

இந்த உத்தமமத்திய சாஸ்திரம் பார்க்கப்பட்டவர்கள் சிறுகுழந்தைகள் கையில் ஒரு புஷ்பத்தைக்கொடுத்து புஷ்பத்தால் இந்த நெம்பரில் எதாகிலும் ஒன்றைதொடச்சொல்லி அந்த நெம்பர் பிரகாரமெடுத்து வாசித்துப்பார்த்தால் நன்மை தீமையை எளிதிலறிந்துக் கொள்ளலாம்.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# உத்தம மத்திப சாஸ்திரம்.



5-அனுமார் எழுபது வெள்ளஞ்சேனையை ஓடிமடக்கி மிஞ்சாதேயென்று நிறுத்தினவிடம் ஆகையாலிது நன்று

8-இராமசுவாமி வனவாசம்போனவிடம் ஆகையால் மனதில் நினைததகாரியம் அனுகூலமாகாது

10-அனுமார் லங்காபுரியை தீயிட்டவிடம் மத்திபம்

214-இராவணனுக்குஞ்சுக்ரீவனுக்கும்மல்யுத்தம் இது நன்றல்ல ஆகையால் நினைத்தகாரியம் தாமிஷத்தில் அனுகூலம்

112-வால்மீகவனத்தில் இராமசுவாமி வனபோஜனஞ் செய்தவிடம் இது மகா நல்லது நினைத்தகாரியம் கைகூடும்

130-சீதாதேவி சிறையிருந்தவிடம் இது ஆகாது நினைத்தகாரியம் பலியாது மத்திபம்

27-இராமசுவாமியும் இலட்சுமணரும் இரகசியம் பேசியவிடம் இது உத்தமம்

45-இராமசுவாமிக்கும் சுக்ரீபனுக்கும் வாக்குவாத மானவிடம் இது உத்தமம்

54-இராவணன் சடாயுபட்சியை மடக்கிப் போர்செய்த விடம் இது ஆகாது மத்திபம்

14-அங்கதன் தூதுபோனயிடம் லாபமுண்டு உத்தமம்

64-இராமசுவாமி தாடகையை ஜெயித்தயிடம் அனுகூலமாகும் மகா உத்தமம்

72-இராமசுவாமிகையால் கும்பகர்னன் மாண்டயிட மாகாது மத்திபம்

37-விபீஷணனுக்குப் பட்டங்கட்டினயிடம் இது மகா நல்லது மகா உத்தமம்

50-இராவணன் சீதையை யெடுத்துக்கொண்டு போனவிடம் இது மத்திபம்

84-இராவணன் சீதாதேவியை சிறையில் வைத்தயிடம நினைத்த காரியஞ் ஜெயமில்லை பயமுண்டு

432-இராமசுவாமி மிதிலைக்குப் போகும்போது மற்சிலையைப் பொன்னாக்கியவிடம் உத்தமம்

520-இராமசுவாமிக்கும் பரசுராமருக்கும் தற்கம் நடந்தயிடமா காது மத்திபம்

96-இராமசுவாமி தபசு பண்ணியவிடம் இது ஆலசியத்திலே அனுகூலமுண்டு

134-இராமசுவாமி சீதாதேவியை பறிகொடுத்து மனவியாகூல மானவிடம்

142-இலட்சுமணப்பெருமாள் இந்திரசித்தை செயித்த யிடம் உத்தமம்

610-இராமசுவாமி சீதாதேவியை சிறைமீட்டியவிடம் தாமிஷத்தில் அனுகூலம்

334-அனுமார் அசோகவனத்திற்குப்போய் சீதையைக்கண்டு திருவாழிமோதிரம் கொடுத்தயிடம் இது உத்தமம்

412-ஸ்ரீராமர் சீதாதேவியைக்காணமல் மனந்திகைத்து நின்ற யிடமாகையால் நினைத்தகாரியம் துயரமுண்டு பொல்லாங்கு வரும் ஜெயமில்லை

418-அனுமார் அசோகவனத்தை அழித்தவிடம் மத்திபம்

216-கிருஷ்ணசுவாமி பவளக்கொடியாள் பாளையத்தை கதண்டு கொட்டி மாளச்செய்வது மத்திபம்.

272-இராவணன் சீதையை சிறையெடுத்தயிடம் தாமிஷத்தில் அனுகூலமாகும்

220-இராமர் ஆஞ்சநேயருக்கு இரகசியம் உபதேசித்தயிடம் இதுமகா உத்தமம்

உத்தம மத்திப சாஸ்திரம்

முற்றிற்று.

---

# தாருட்ய தாது விருத்தி லேகியம்.



இச் சிறந்த லேகியம், ஸ்திரீ புருஷர்களுக்கு எக்காரணங் கொண்
ஏர்ப்பட்ட பலஹீனமானாலும் சரி, அதை மாற்றி, நல்லபலம், உற்சாக
த்ருடம், சுறுசுறுப்பு மனோதைரியம், அழகு, ஜீரணசக்தி முதலிய சுபங்க
உண்டு பண்ணும். மேகரோக சம்பந்தத்தால் அடிக்கடி ஏற்படும் சங்க
மான நோய்களை வரவொட்டாமல் தடுத்து, சுத்த ரத்தத்தைப் பெருக்கு
திரிதஸ்கலிதம், சொப்பன ஸ்கலிதம் என்னும் இருவகைத் துன்பங்களை
சுலபமாய் மாற்றி, விந்துவை கெட்டிப்படுத்தி ஸ்திரீ புருஷர்களுக்கு இ
பத்தை விருத்தி செய்யும். அறிவீனத்தால், சிறுவயதில் பலவகையிலு
விந்துவை, நிலமிசைச் சிந்திக் களித்ததால் உண்டான பேடித்தனத்தை
போக்கி, ஜீவ நரம்புகளைப் பலப்படுத்தி, பும்ஸத்துவத்தை உண்டுபண்ணு
தளர்ந்த கிழவர்களும் இந்த லேகியத்தை உட்கொண்டால் நல்ல யெ
வனத்தை அடைவார்கள். ஓர் முறை பரீக்ஷியுங்கள். இது சித்தர் பாகம்.

வேண்டுவோர் முழுவிலாசத்துடன் கடிதம் எழுதுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 20-நாள் (காலை-மாலை) அடங்கிய லேகியம் | 2 | 0 | 0 |
| தபால் சார்ஜ் முதலியன | 0 | 8 | 0 |
| 40-நாள் (காலை-மாலை) அடங்கிய லேகியம் | 4 | 0 | 0 |

தபால் சார்ஜ் இனம்.

டாக்டர்-மணியன்ஸ்

ஸாது மெடிகல் ஹால்,

46-பாஷ்ய கார்லு நாயுடு வீதி

கொண்டிதோப், மதராஸ்.